# நபி வழிகாட்டும் அஹ்லுல்பைத்




மௌலவி அப்துர்ரஹீம் பாஸில்

இஸ்லாமிய கலாசார நிலையம்
மீராவோடை

# நபி வழிகாட்டும் அஹ்லுல்பைத்

வெளியீடு : இஸ்லாமிய கலாசார நிலையம்
ஆலிம் வீதி, மீராவோடை

அச்சு : அந்-நூர் ஓப்செட், கல்முனை
067-2221269 & 077-6163575

முதற் பதிப்பு : ரபியுல் அவ்வல் 1426

பக்கம் : 24+4=28

விலை : 40.00

# ஆசிரியருரை

அன்பும் அருளும் நிறைந்த அல்லாஹ்வைப் புகழ்ந்து அருமை நாயகம் முஹம்மது முஸ்தபா ஸல்லல்லாஹு அலைஹி வஆலிஹி வஸல்லம் அவர்கள் மீதும், அவர்கள் வழிதந்த அன்னவர்களின் புனித குடும்பத்தினர் மீதும் அல்லாஹ்வின் சாந்தியும் சமாதானமும் உண்டாவதாக!

"உங்களில் நல்ல அமல் செய்பவர் யார் என சோதிப்பதற்காகவே வாழ்வையும் மரணத்தையும் (அல்லாஹ்) அளித்தான்". (அல்குர்ஆன்)

இவ்வுலகில் மனிதன் ஸாலிஹான நல்ல அமல் புரிய வேண்டும் எனும் நோக்குடனேயே இவ்வுலக வாழ்வை அல்லாஹ் மனிதனுக்களித்தான். மகத்தான இவ்வுலக வாழ்வை மறுமையின் வெற்றிக்கான களமாகக் கருதும் இறைவன் இவ்வுலக வாழ்வின் போது மனிதன் எவ்வாறு நல்ல அமல் செய்ய வேண்டும் என்பதையும் அவனின் தூதர்கள் மூலம் தெரியப்படுத்தினான்.

இந்த இறை நியதிக்கேற்ப ஸாலிஹான நல்ல அமல்களைப் புரிந்திட இறைவழிகாட்டல் இன்றியமையாததாகும். இறைவழிகாட்டலின் மூலமே எவை நல்ல அமல்கள் என்பதனைத் தீர்மானிக்க முடியும். குறுகிய சிந்தனை, சுயநலன் போன்ற சுபாவங்களைக் கொண்ட மனிதர்களால் தனது வாழ்க்கைக்கான வழிகாட்டலை அமைத்துக் கொள்ள முடியாதென்பது இறை நியதியாகும்.

நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஆலிஹி வஸல்லம் அவர்களின் வபாத்தின் பின்னர், அல்குர்ஆனையும் அவர் வழிகாட்டித் தரும் அன்னவர்களின் குடும்பத்தினரையும் பின்பற்ற வேண்டும் என்பது இறை தீர்மானமும் இறைநியதியுமாகும் எனும் கருத்தை போதிய ஆதாரங்களுடன் கூறும் இந்நூல் உலகில் ஸாலிஹான நல்ல அமல் புரிய விரும்பும் அனைவருக்குமான மகத்தான வழிகாட்டியாகும். அஹ்லுஸ் ஸுன்னாக்களால் மதிக்கப்படும் மூலாதாரங்களிலிருந்து மட்டுமே பெறப்பட்ட ஆதாரங்களைக் கொண்டே இந்நூல் காணப்படுவது குறிப்பிடத்தக்க அம்சமாகும்.

பல இயக்கங்களாக முரண்பட்ட சிந்தனைகளுடன் வித்தியாசமான அணுகுமுறைகளுடன் இஸ்லாத்தைப் பின்பற்றும் அனைவரும் ஓரணியில் ஒன்றுபட்டு இஸ்லாத்தைப் பின்பற்றி போதிக்க இந்நூல் இறுதி வழிகாட்டியாக அமையும் என்பதில் ஐயமில்லை. அஹ்லுல் பைத்களைப் பற்றி அறியாது அவர்களைப் பின்பற்றி வாழ்வதன் அவசியத்தை விளங்காது அவர்களின் தரத்தைத் தாழ்த்திப் பேசுகின்ற, எழுதுகின்ற, விமர்சிக்கின்ற அனைவருக்கும் தங்களைத் திருத்திக் கொள்வதற்கான ஒரு சந்தர்ப்பத்தை இந்நூல் பெற்றுக்கொடுக்கும் என எதிர்பார்க்கின்றோம்.

வழிகேட்டிலிருந்து நேர்வழி திட்டமாக தெளிவாகி விட்டது". (அல்குர்ஆன்)

காழ்ப்புணர்ச்சியைக் கைவிட்டு நேரிய இஸ்லாத்தின் தூயவழியைப் பின்பற்றி வாழும் பாக்கியத்தை அல்லாஹுதஆலா எம் அனைவருக்கும் தந்தருள்வானாக!

ரபியுல் அவ்வல் 1426

*மௌலவி அப்துர்ரஹீம் பாஸில்*

إِنَّمَا يُرِيدُ اللَّهُ لِيُذْهِبَ عَنكُمُ الرِّجْسَ أَهْلَ الْبَيْتِ وَيُطَهِّرَكُمْ تَطْهِيرًا

**''ஓ... அஹ்லுல் பைத்தினரே! உங்களை விட்டு சகல அசுத்தங்களைளயும் நீக்கி உங்களை முற்றுமுழுதாக தூய்மையாக்கவே அல்லாஹ் விரும்புகிறான''** (33:33)

## அஹ்லுல் பைத் யார்?

மேற்படி அல்குர்ஆன் வசனம் அறிமுகம் செய்யும் பரிசுத்தவான்களான அஹ்லுல்பைத் என்போர் யார்? என்பதே இங்கு தோன்றும் வினாவாகும். இவ்வினாவுக்கு பல விடைகள் முன்வைக்கப்படுகின்றன.

1. நபி ஸல்லல்லாஹு அலைஹி வஆலிஹி வஸல்லம் அவர்களின் மனைவிமார்
2. பனூஹாஷிம்கள் அனைவரும்
3. 'அஸ்ஹாபுல் கிஸாஉ' எனப்படும் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஆலிஹி வஸல்லம், அலி, பாத்திமா, ஹஸன், ஹுஸைன் (அலை) ஆகியோர்
4. நபி ஸல்லல்லாஹு அலைஹி வஆலிஹி வஸல்லம் அவர்களுடன் வம்சரீதியாக அல்லது தோழமை ரீதியாக இணைந்திருந்தவர்கள்.

இவ்வாறான பல கருத்துக்களை மார்க்க அறிஞர்களின் நூல்களில் அவதானிக்க முடிகின்றன. இம்முரண்பட்ட கருத்துக்களில் சரியானது எது? அது நபி ஸல்லல்லாஹு அலைஹி வஆலிஹி வஸல்லம் அவர்களால் அடையாளம் காட்டப்பட்டுள்ளதா? என நோக்கும்போது ஒரு தெளிவான முடிவைப் பெறமுடிகின்றது.

அஹ்லுல்பைத் யார்? எனும் விடயத்தில் ஏன் முரண்பட்ட கருத்துக்கள் தோன்றியுள்ளன என்பதை விடுத்து, நபி ஸல்லல்லாஹு அலைஹி வஆலிஹி வஸல்லம் அவர்கள் அஹ்லுல்பைத் என்பவர்களை அடையாளம் காட்டியுள்ளார்களா? என நோக்குவதே சிறந்த அணுகுமுறையாக அமையும். இதன்படி அஹ்லுல்பைத் என்பவர்கள் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஆலிஹி வஸல்லம் அவர்கள், அலி, பாத்திமா, ஹஸன், ஹுஸைன் (அலை) ஆகிய ஐவருமே நபியவர்களால் இனங்காட்டப்பட்டுள்ளதை பின்வரும் ஹதீஸ்களிலிருந்து அறிய முடிகின்றது.

**عن صفية بنت شيبة قالت قالت عائشة ثم خرج النبي صلى الله عليه وسلم غداة وعليه مرط مرحل من شعر أسود فجاء الحسن بن علي فأدخله ثم جاء الحسين فدخل معه ثم جاءت فاطمة فأدخلها ثم جاء علي فأدخله ثم قال إنما يريد الله... (صحيح مسلم ج 4 ص 1883 )**

ஆயிஷா நாயகி அறிவிக்கின்றார்கள்: ஒருநாள் காலை நபி ஸல்லல்லாஹு அலைஹி வஆலிஹி வஸல்லம் அவர்கள் கறுப்பு நிற போர்வையினால் போர்த்திக்கொண்டு வெளியே வந்தார்கள். அப்போது, ஹஸன் பின் அலீ வந்தார்கள்; நபியவர்கள் அவரை தனது போர்வைக்குள் நுழைத்துக் கொண்டார்கள். அதன்பின், ஹுஸைன் வந்தார்கள்: நபியவர்கள் அவரையும் தனது போர்வைக்குள் நுழைத்துக் கொண்டார்கள். அதன்பிறகு, பாத்திமா வந்தார்கள்: நபியவர்கள் அவரையும் போர்வைக்குள் நுழைத்துக் கொண்டார்கள். பின்னர் அலீயும் வந்தார்கள்; அவரையும் நபியவர்கள் தனது போர்வைக்குள் நுழைத்துக் கொண்டு, ஓ... அஹ்லுல்பைத்தினரே! உங்களை விட்டும் சகல அசுத்தங்களையும் நீக்கி முற்றுமுழுதாக தூய்மையாக்க அல்லாஹ் விரும்புகிறான்" எனும் திருவசனத்தை ஓதிக்காட்டினார்கள். (ஸஹீஹ் முஸ்லிம், பாகம் 4, பக்கம் 1883)

عن ابي سعيد الخدري قال: كان يوم ام سلمة ام المؤمنين فجاء جبريل بهذه الآية انما يريد الله... قال فدعا رسول الله (ص) بحسن وحسين وفاطمة وعلى فضمهم ونشر عليهم الثوب ثم قال اللهم هؤلاء اهل بيتي اللهم اذهب عنهم الرجس اهل البيت وطهرهم تطهيرا قالت ام سلمة فا نا معهم يانبي الله؟ قال انت على مكانك وانت على خير

(تفسير الدر المنثور ج 5 /195) (صحيح الترمذي:ج 5 ص 351)

அபூஸயீத் (ரழி) அறிவிக்கின்றார்கள்: ஒருநாள் ஜிப்ரீல் (அலை) அவர்கள் உம்மு ஸல்மா நாயகியின் வீட்டில் ''ஓஹ்... அஹ்லுல்பைத்தினரே" எனும் வசனத்தை நபியவர்களிடம் கொண்டு வந்தார்கள். உடனே நாயகமவர்கள் ஹஸன், ஹுஸைன், பாத்திமா, அலீ ஆகியோரைத் தம்மோடு இணைத்து ஒரு போர்வையினால் போர்த்திக் கொண்டு பின்வருமாறு பிரார்த்தித்தார்கள்: இவர்களே என் குடும்பத்தினராகிய அஹ்லுல்பைத்தினராகும். ஆகவே இவர்களை விட்டு சகல அசுத்தங்களையும் நீக்கி அவர்களை பரிசுத்தவான்களாக ஆக்கிவைப்பாயாக! என வேண்டினார்கள்.

அப்போது, உம்மு ஸல்மா நாயகியவர்கள், நானும் அவர்களுடன் (அஹ்லுல்பைத்களுடன்) இல்லையா? என நபியவர்களிடம் வினவினார்கள். அதற்கு நபியவர்கள், ''நீங்கள் உங்களது இடத்தில் இருந்து கொள்ளுங்கள். நீங்கள் நன்மையாளராகவே இருக்கின்றீர்கள்" என்றார்கள். (திர்மிதீ பாகம்-05, பக்கம் 351, தப்ஸீர் துர்ருல் மன்தூர் பாகம்-05, பக்கம் 198)

عن سعد بن ابي وقاص لما نزلت هذه الآية تعالوا ندع ابناء نا وابناء كم.... فقال دعاالنبي عليا و فاطمة وحسنا وحسينا فقال اللهم هؤلاء اهلي (صحيح مسلم)

ஸஃது பின் அபீவக்காஸ் (ரலி) அறிவி.
எனும் வசனம் இறங்கியபோது நபியவர்கள் பாத்திமா, அலீ, ஹஸன்,

ஹுஸைன் ஆகியோரை அழைத்து, இறைவா! இவர்களே எனது குடும்பத்தினர் எனக் கூறினார்கள். (ஸஹீஹ் முஸ்லிம்)

மேற்படி ஆதாரங்கள் அஹ்லுல்பைத்தினர் யார்? எனும் வினாவுக்கு நேரடியாகவே தெளிவான பதிலைத் தருகின்றன. அஹ்லுல்பைத்களை அடையாளங் காட்டுவதற்காக நபியவர்கள் அலி, பாத்திமா, ஹஸன், ஹுஸைன் ஆகியோருடன் தன்னையும் இணைத்து ஒரு போர்வையால் போர்த்தி அவர்களை அஹ்லுல்பைத்தாக அடையாளம் காட்டியுள்ளார்கள். இவர்கள் ஐவரும்தான் சகல பாவ காரியங்களிலிருந்தும் அல்லாஹ்வால் பரிசுத்தமாக்கப்பட்ட பரிசுத்தவான்களாகும்.

நபியவர்களின் மனைவிமார்கள் அஹ்லுல்பைத் எனும் வட்டத்தினுள் வரமுடியா தென்பது உம்மு ஸல்மா நாயகி, 'நானும் அஹ்லுல்பைத்தில் இல்லையா'? என நபியவர்களிடம் வினவியபோது அவர்கள் அளித்த பதிலிருந்து அறிய முடிகின்றது. சில அறிஞர்கள் அஹ்லுல்பைத் எனும் வசனம் நபியவர்களின் மனைவமார்களின் விடயங்களைப் பற்றிக் கூறும்போதுதான் கூறப்பட்டுள்ளதால் அது நபியவர்களின் மனைவிமார்களையே குறிப்பதாக வாதாடுகின்றனர். நிச்சயமாக இப்படியபானவர்களின் வாதங்கள் மேற்படி ஆதாரங்களினால் பொய்ப்பிக்கப்படுகின்றன.

இவ்வாதத்தினை அல்குர்ஆன் பயன்படுத்தியுள்ள சொற்பிரயோகங்களின் மூலமாகவும் பிழையானது என நிருபிக்க முடியும். நபியவர்களின் மனைவிமார்களை நோக்கி, لستنّ / بيوتكنّ / اقمن / اطعن என அரபு இலக்கணப்படி பெண்களை நோக்கி விழித்துப்பேசும் அல்குர்ஆன் அஹ்லுல்பைத்தைப் பற்றிய வசனத்தில் மாத்திரம் يطهركم / عنكم என சொற்பிரயோக முறையை மாற்றியுள்ளதை அவதானிக்க முடிகின்றது. நபியவர்களின் மனைவிமார்களை விழித்துப் பேசுபவையாக இருந்திருந்தால் يطهركنّ / عنكنّ என்று வந்திருக்க வேண்டும். எனவே இவ்வசனம் நபியின் மனைவமார்களை குறிக்கும் எனும் வாதம் தவறானதாகும்.

மேற்படி ஆதாரங்களில் கவனிக்கப்பட வேண்டிய மற்றுமோர் விடயம் யாதெனில, நீங்கள் வாருங்கள் تعالوا ندع ابناءنا وابناءكم எனும் வசனம் இறங்கியபோதும்கூட நாயகமவர்கள் மீண்டும், பாத்திமா, அலீ, ஹஸன், ஹுஸைன ஆகியோரை அழைத்து இவர்கள்தான் **எனது குடும்பத்தினர்** எனவும் குறிப்பிட்டுள்ளமை நபியவர்கள் இவ்விடயத்தில் மிகத்தெளிவான நிலைப்பாட்டுடன் இருந்துள்ளதை உறுதிப்படுத்துகின்றது.

இதைவிட மேலும் பல வழிமுறைகள் ஊடாகவும் அஹ்லுல்பைத்தினரை இனங்காட்ட நாயகமவர்கள் முயன்றுள்ளார்கள்.

عن ابن عباس :شهدت رسول الله(ص) تسعة اشهر يأتي كل يوم باب علي بن ابي طالب عند وقت كل صلاة يقول "السلام عليكم ورحمة الله وبركاته يا أهل البيت انما ير يد الله ليذهب.. (الدر المنثور ج5 ص 199)

இப்னு அப்பாஸ் (ரலி) அறிவிக்கின்றார்கள்: **நான் நபியவர்களுடன் ஒன்பது மாதங்கள் இருந்துள்ளேன். ஒவ்வொரு நாளும் தொழுகை நேரத்தின்போது நபியவர்கள், அலீ பின் அபீதாலிப் வீட்டு வாசலுக்கு வந்து, ஓ... அஹ்லுல்பைத்தினரே! என அழைத்து ஸலாம் கூறுவதுடன் ஓ...அஹ்லுல் பைத்தினரே! எனும் வசனத்தையும் ஓதுவார்கள்.** (துர்ருல் மன்தூர் பாகம்-05, பக்கம் 199)

இந்நிகழ்வு நபியவர்கள் தினமும் அஹ்லுல்பைத்துக்களை அறிமுகப்படுத்துவதிலும், ஞாபகப்படுத்துவதிலும் எவ்வளவு அக்கறையுடன் செயற்பட்டுள்ளார்கள் என்பதை தெளிவுபடுத்துகின்றது. பிறிதொரு சந்தர்ப்பத்தில் அல்குர்ஆன் குதர்க்கவாதிகள் சிலருடன் முபாஹலாவிற்காக அழைத்தபோது,

''**நபியே! இதுபற்றிய முழு விபரமும் உமக்கு வந்துசேர்ந்த பின்னரும் எவரேனும் இது குறித்து தர்க்கம் செய்தால், வாருங்கள் எங்கள் புதல்வர்களையும் உங்கள் புதல்வர்களையும், உங்கள் ஆண்களையும் எங்கள் ஆண்களையும், எங்களையும் உங்களையும் அழைத்து (ஒன்று திரட்டி வைத்துக் கொண்டு) பொய்யர்கள் மீது அல்லாஹ்வின் சாபம் உண்டாவதாக! என்று நாம் பிரார்த்திப்போம்.** (3:61)

நபியவர்கள் தனது குடும்பத்தில் அஹ்லுல்பைத் எனும் ஐவரையுமே முபாஹலாவிற்காக அழைத்துச் சென்றார்கள். அச்சந்தர்ப்பத்தில் நபியின் மனைவிமார்கள், ஏனைய குடும்ப உறவினர்கள் இருந்தபோதும் எவரையும் தனது தரப்பின் சார்பில் அழைத்துச் செல்லாமல் அலீ, பாத்திமா, ஹஸன், ஹுஸைன் ஆகியோரை மாத்திரமே அழைத்துச் சென்றுள்ளமையானது நபியவர்கள் எச்சந்தர்ப்பத்திலும் அஹ்லுல்பைத்தினரின் தனித்துவத்தை உலகறியச் செய்யவே மேற்கொண்ட முயற்சியாகும்.

அஹ்லுல் பைத்தெனும் இவ்வட்டத்தினுள் நாங்கள் இருக்கின்றோம்; நாங்களும் அஹ்லுல்பைத்துகள்தான் என்று எந்த சந்தர்ப்பத்திலும் நபியவர்களின் மனைவிமார்கள் குறிப்பிட்டுள்ளதாக அல்லது வாதாடியதாக எந்த ஆதாரமும் இல்லை. ஆனால், நபி ஸல்லல்லாஹு அலைஹி வஆலிஹி வஸல்லம் அவர்கள் அலீ, பாத்திமா, ஹஸன், ஹுஸைன் ஆகிய ஐவரும் தங்களை பல சந்தர்ப்பங்களில் அஹ்லுல்பைத்களாக பிரகடனப்படுத்தியுள்ளனர். உதாரணமாக இமாம் ஹஸன் (அலை) ஒரு குத்பா பிரசங்கத்தின்போது:

**ايها الناس من عرفني فقد عرفني ومن لم يعرفني فأنا الحسن بن علي وأنا بن النبي وأنا بن الوصي وأنا بن البشير وأنا بن النذير وأنا بن الداعي إلى الله بإذنه وأنا بن السراج المنير وأنا من أهل البيت ( مستدرك الحاكم )**

**மனிதர்களே! என்னை அறிந்தவர் நான் யாரென அறிவார். என்னை அறியாதவர்களுக்கு நான் அலீயின் மகன் ஹஸன் ................... நான் அல்லாஹ்வால் பரிசுத்தப்படுத்தப்பட்ட அஹ்லுல்பைத்தினரில் ஒருவன்.** (ஆதாரம் ஹாகிம்)

**ஏன் அஹ்லுல்பைத் விடயத்தில் முரண்பட்ட கருத்துக்கள்?**

அஹ்லுல்பைத் விடயத்தில் முன் குறிப்பிடப்பட்டது போன்ற சில முரண்பாடான கருத்தக்களை ஹதீஸ், தப்ஸீர் நூல்களில் அவதானிக்க முடிகின்றது. அவைகளின் உண்மை நிலை குறித்து நோக்கும்போது அக்கருத்துக்களை பின்வரும் ராவிகள் அறிவித்துள்ளனர்.

1. உர்வா பின் சுபையிர்
2. இக்ரிமா
3. மகாதில்

இந்த மூன்று ராவிகளின் தராதரம் பற்றி ஹதீஸ் திறனாய்வுக்கலை அறிஞர்கள் ( ارباب الجرح والتعديل ) அதிருப்திபட்டுள்ளனர்.

1. உர்வா பின் சுபையிர்

**عروة بن الزبير كان ممن يحملون عداء شديد الى أمير المؤمنين علي بن ابي طالب ( الغارات للثقفي )**

உர்வா பின் சுபையிர், அலீ பின் அபீதாலிப் அவர்களை கடும் பகை உணர்வுடன் நோக்கக் கூடியவர். (அல் ஆசாத் லித் தகபீ, பாகம்-02)

2. இக்ரிமா

**عكرمة كان من المعتقدين بعقيدة الخوارج ومن المعروف ان الخوارج لهم موقف من علي (ع) وكان عكرمة من المشهورين بالتزوير ( نقل بالمعنى من ميزان الاعتدال )**

இக்ரிமா காரிஜிகளின் கொள்கைகளை ஏற்றுக்கொண்டவர்களில் ஒருவர். அலி (அலை) பற்றி காரிஜிகளின் நிலைப்பாடு தெரிந்த விடயமாகும். அத்துடன் இக்ரிமா பொய் சொல்வதிலும் தீய பேச்சுப் பேசுவதிலும் பிரபல்யமானவர். (மீஸானுல் இ:.திதால்)

3. மகாதில் பின் ஸல்மான்

مقاتل بن سليمان : كان من المعروفين بالكذب
( نقل بالمعنى من كتاب المجروحين لإبن حبان )

மகாதில் பின் ஸல்மான் அலீயைப் பகைமை கொள்வதில் இக்ரிமாவைப் போன்றவர். அத்துடன் பொய் சொல்பவராக அடையாளங் காணப்பட்டவர். (இப்னு ஹிப்பான்: அல் மஜ்ரூஹீன் பாகம் 3: பக்கம் 41)

எனவே இவ்வாறான நம்பகத்தன்மையற்ற, அஹ்லுல்பைத்களுடன் பகைமை உணர்வுள்ள குறிப்பிடப்பட்டுள்ள ராவிகளால்தான் அஹ்லுல்பைத் விடயத்தில் முரண்பட்ட கருத்துக்கள் கட்டவிழ்க்கப்பட்டுள்ளன.

ஆகவே, அஹ்லுல்பைத் பற்றி அறிமுகம் செய்யும் திருவசனம் இறங்கியபோது நபியவர்கள் அலீ, பாத்திமா, ஹஸன், ஹுஸைன் ஆகியோரை அழைத்து இவர்கள்தான் அஹ்லுல்பைத்தினர். இவர்கள்தான் இறைவனால் பாவகாரியங்கள் அனைத்திலிருந்தும் பாதுகாக்கப்பட்டவர்கள் எனக் கூறும் ஹதீஸ் முதவாதிர் எனும் தரத்திலுள்ளதாகும். இந்த ஹதீதினை பின்வரும் ராவிகள் அறிவித்துள்ளனர்.

1. அலீ பின் அபீதாலிப் (அலை)
2. ஹஸன் பின் அலீ (அலை)
3. இப்னு அப்பாஸ் (ரலி)
4. ஸஃத் பின் அபீவக்காஸ் (ரலி)
5. அபூ ஸயீத் அல் குத்ரீ (ரலி)
6. ஜாபிர் பின் அப்துல்லாஹ் (ரலி)
7. வாஸில் பின் அஸ்கஃ (ரலி)
8. அல் பர்ராஉ பின் ஆஸிப் (ரலி)
9. அபூ ஹம்ரா (ரலி)
10. அபூலைலா (ரலி)
11. மஃகல் பின் யசார் (ரலி)
12. அனஸ் பின் மாலிக் (ரலி)
13. அம்ரு பின் அபீ ஸல்மா (ரலி)
14. உம்மு ஸல்மா (ரலி)
15. ஆயிஷா (ரலி)

முக்கியமான மேற்படி ராவிகளால் அறிவிக்கப்பட்டுள்ள இந்த ஹதீத் பதிவாகியுள்ள சில முக்கிய நூல்களும் நூலாசிரியர்களும் வருமாறு:

صحيح المسلم :ج4 ص 188
صحيح الترمذي ج 5 ص351
الحاكم الحسكاني: شواهد التنزيل ج 2 ص 13
احمد ابن حنبل :المسند ج 6 ص 142
ابن الاثير : اسد الغابة ج 7 ص 343
ابن كثير : تفسير القرآن العظيم ج 3 ص 493
الطبري : تفسير القرآن ج 12ص 60
الامام السيوطي : الا تقان ج 2 ص 563
الرازي : مفاتيح الغيب ج 8 ص 71
القرطبي : الجامع لاحكام القرآن ج 4 ص 178
الزمخشري: الكشاف ج 1 ص 369
البخاري : فتح البيان ج 2ص 256
الطحاوي : مشكل الآثار ج1 ص332
ابن حجر : الصواعق المحرقه ص 143

## அஹ்லுல்பைத்களை நேசித்தலும் பின்பற்றலும்

நபி ஸல்லல்லாஹு அலைஹி வஆலிஹி வஸல்லம் அவர்களின் பரிசுத்த குடும்பத்தவர்களான அஹ்லுல்பைத்களை நேசிப்பதும் பின்பற்றுவதும் முஸ்லிம்கள் அனைவர் மீதும் கடமையாகும். அஹ்லுல்பைத்களை நேசித்தல், அன்பு வைத்தல் என்பது அல்லாஹ்வின் கட்டளையும் நபியவர்களின் வேண்டுதலுமாகும்.

அல்லாஹுதஆலா அல்குர்ஆனில் அஹ்லுல்பைத்களை நேசிப்பதன் அவசியம் பற்றி பின்வருமாறு கூறுகின்றான்:

قل لااسئلكم عليه اجرا الا المودة في القربى ( الشورى 23)

**நபியே! நீர் கூறும்! நான் உங்களிடம் எனது குடும்பத்தினரை அன்பு கொள்வதைத் தவிர வேறு எதனையும் கூலியாகக் கேட்கவில்லை.** (அல்குர்ஆன் ஷூரா: 23)

நபி ஸல்லல்லாஹு அலைஹி வஆலிஹி வஸல்லம் அவர்கள் புனித இஸ்லாத்தை, அதன் தஃவாவை முன்னெடுக்கும்போது அவர்களடைந்த அவலங்கள் அளவிட முடியாதவை. இவ்வாறு தஃவா பாதையில் பல சிரமங்களையெல்லாம் அனுபவித்த நபியவர்களுக்கு, அதற்காக அவர்களின் புனித குடும்பத்தினரை நேசிப்பதையே கூலியாக

வேண்டுமாறு அல்லாஹ் நபி ஸல்லல்லாஹுˀ அலைஹி வஆலிஹி வஸல்லம் அவர்களுக்கு ஏவியுள்ளான். இப்படியானால் நபியவர்களின் குடும்பத்தினரை நேசிப்பது, அன்பு வைப்பது இந்த உலகில் மனிதன் செய்யும் மிகச் சிறந்த அமல்களில் ஒன்றாக அமையும்.

**عن بن عباس رضي الله عنهما قال ثم لما نزلت قل لا أسألكم عليه أجرا إلا المودة في القربى قالوا يا رسول الله ومن قرابتك هؤلاء الذين وجبت علينا مودتهم قال علي وفاطمة وابناهما ( المعجم الكبير ج: 3 ص: 47)**

இப்னு அப்பாஸ் (ரலி) அறிவிக்கின்றார்கள்: قل لااسئلكم عليه اجرا... எனும் வசனம் நபியவர்களுக்கு இறங்கியபோது, அவர்களிடம் நாங்கள் அன்பு வைக்குமாறு **கடமையாக்கப்பட்டுள்ள** உங்களது குடும்பத்தினர் யார்? என வினவியபோது, அதற்கு அவர்கள் அலீயும், பாத்திமாவும், ஹஸனும், ஹுˀஸைனும் என்றார்கள். (அல் ஹாகிம், இஹ்யாஉல் மையித், தபரி)

இதில் அஹ்லுல்பைத்களை நேசித்தல் அனைத்து முஸ்லிம்களுக்கும் கடமை என்பது நேரடியாக வலியுறுத்தப்படுவதை அவதானிக்க முடிகின்றது. ஆதலால், இதனை ஒரு சாதாரண விடயமாகக் கருத முடியாது.

நபி ஸல்லல்லாஹுˀ அலைஹி வஆலிஹி வஸல்லம் அவர்கள் மேற்படி வசனத்தின் இறைகட்டளைக்கேற்ப அஹ்லுல்பைத்களை நேசிப்பதன் அவசியம் பற்றி பல வழிமுறைகளில் தெளிவுபடுத்தியுள்ளதை அவர்களது ஹதீஸ்களில் அவதானிக்க முடிகின்றது.

**عن بن عباس قال قال رسول الله صلى الله عليه وسلم ثم أحبوا الله لما يغذوكم من نعمة وأحبوني بحب الله وأحبوا أهل بيتي لحبي (سنن الترمذي ج: 5 ص: 664)**

இப்னு அப்பாஸ் (ரலி) அறிவிக்கின்றார்கள்: **அல்லாஹ் உங்களுக்கு வழங்கிய அருள்களுக்காக அல்லாஹ்வை நேசியுங்கள் அல்லாஹ்வை நேசிப்பதானால் என்னை நேசியுங்கள். என்னை நேசிப்பதானால் எனது குடும்பத்தை - அஹ்லுல்பைத்தை - நேசியுங்கள் என நபி ஸல்லல்லாஹுˀ அலைஹி வஆலிஹி வஸல்லம் அவர்கள் கூறினார்கள்.** (திர்மிதி)

عن علي قال قال رسول الله (ص) ادبوا اولادكم علي ثلاث خصال حب نبيكم وحب اهل بيته وعلى قراءة القرآن فان حملة القرآن في ظل الله يوم لا ظل الا ظله مع انبيائه واصفيائه( السيوطي :الجامع الصغير)

அலீ (அலை) அறிவிக்கின்றார்கள்: உங்களது குழந்தைகளுக்கு மூன்று விடயங்களைக் கற்றுக் கொடுங்கள். அவைகளாவன: முதலாவது நபியை நேசித்தல்; அடுத்தது அஹ்லுல்பைத்தை நேசித்தல்; இறுதியானது அல்குர்ஆனை ஓதுவது ஆகியனவாகும். நிச்சயமாக அல்குர்ஆனை

மனனமிட்டவர் எவ்வித நிழலுமல்லாத மறுமை நாளில் நபியவர்களுடனும் அருள்பெற்ற பாக்கியவான்களுடனும் இருப்பர் என நபி ஸல்லல்லாஹு அலைஹி வஆலிஹி வஸல்லம் அவர்கள் கூறினார்கள். (இமாம் சுயூதி: அல் ஜாமிஉஸ் ஸகீர்)

عن علي قال : قال رسول الله (ص) يا علي ان الاسلام عريان لباسه التقوي......
واساس الاسلام حب اهل البيت (ينابيع المودة)

இமாம் அலீ (அலை) அறிவிக்கின்றார்கள்: நாயகமவர்கள் அலீயே! இஸ்லாம் நிர்வாணம் எனும் நிலையிலுள்ளது. அதனது ஆடை இறையச்சமாகும் ............ இஸ்லாத்தின் அடிப்படை என்னையும் அஹ்லுல்பைத்களையும் நேசிப்பதாகும் எனக் கூறினார்கள். (யனாபிஉல் மவத்தாஹ்)

عن الحسن ابن علي قال قال رسول الله الزموا مودتنا اهل البيت فانه من لقي الله عزوجل وهويودنا دخل الجنة بشفاعتنا والذي نفسي بيده لاينفع عبدا عمله الا بمعرفة حقنا (الطبراني)

இமாம் ஹஸன் அறிவிக்கின்றார்கள்: அஹ்லுல்பைத்களாகிய எங்களை நேசிப்பதை கட்டாயமாக்கிக் கொள்ளுங்கள். நிச்சயமாக எவர் எங்களை நேசித்த நிலையில் அல்லாஹ்வை சந்திக்கின்றாரோ அவர் எங்களுடைய சிபாரிசினால் சுவனம் நுழைவார். யாரிடத்தில் எனது ஆன்மா உள்ளதோ அவன்மீது ஆணையாக எங்களுடைய (அஹ்லுல்பைத்களுடைய) உரிமைகளை அறியாமல் செய்யும் எந்த அமலும் (மறுமையில்) பிரயோசனமளிக்காது என நபி ஸல்லல்லாஹு அலைஹி வஆலிஹி வஸல்லம் அவர்கள் கூறினார்கள். (தபரானி)

அஹ்லுல்பைத்களை நேசிப்பதன் அவசியம் பற்றி கூறப்பட்டுள்ள ஹதீத்களிலிருந்து சில முடிவுகளைப் பெற முடிகின்றது.

1. ஒரு மனிதன் அல்லாஹ்வை நேசிக்க வேண்டுமானால் நபியவர்களை நேசிக்க வேண்டும்; நபியவர்களை நேசிக்க வேண்டுமாயின் அஹ்லுல்பைத்களை நேசிக்க வேண்டும். அஹ்லுல்பைத்களை நேசிக்காவிட்டால் நபியையோ அல்லாஹ்வையோ நேசித்ததாகக் கருதமுடியாது.
2. குழந்தைகளுக்கு பெற்றோர் கற்றுக்கொடுக்க வேண்டிய விடயங்களில் அஹ்லுல்பைத்களை நேசிப்பதன் அவசியத்தைக் கற்றுக்கொடுப்பதும் ஒன்றாகும்.
3. இஸ்லாத்தின் அடிப்படை அல்லது அத்திவாரம் அஹ்லுல்பைத்தை நேசிப்பதாகும். அஹ்லுல்பைத்தை நேசிக்காமல் இஸ்லாத்தை காண முடியாது.

4. அஹ்லுல்பைத்களை நேசிப்பவர்கள் அவர்களின் சிபாரிசினால் சுவனம் நுழைவர்.

5. அஹ்லுல் பைத்களைப் பற்றி அறியாதவனின் அமல் பிரயோசனமற்றதாகும்.

ஆகவே, அஹ்லுல் பைத்களை நேசிப்பது வாஜிபாகும். நேசம் என்பது அவர்களை உள்ளத்தில் , சொற்களில் வைத்து அழகுபார்க்கும் ஒரு விடயமல்ல. மாறாக, அவர்களை நேசித்தல் என்பது அவர்கள் காட்டிய வழியை நேசத்துடன் ஏற்று அவர்களைப் பின்பற்றுவதுமாகும். அவர்களைப் பின்பற்றாமல் நேசித்தல் என்பது நடக்கமுடியாததொன்றாகும். இதனை அல்குர்ஆன் இவ்வாறு கூறுகின்றது:-

قل ان كنتم تحبون الله فاتبعوني يحببكم الله ويغفر لكم ذ نوبكم(آل عمزان31)

**நபியே! கூறுவீராக! நீங்கள் அல்லாஹ்வை நேசிப்பவர்களாக இருந்தால் என்னைப் பின்பற்றுங்கள். அல்லாஹ் உங்களை விரும்புவதுடன் உங்களது பாவங்களையும் மன்னிப்பான்.** (ஆலஇம்ரான்: 31)

இங்கு அல்லாஹ்வை நேசித்தல் என்பதற்கு நபியர்களைப் பின்பற்றுதல் என்று விளக்கம் கொடுக்கப்பட்டுள்ளது. எனவே பின்பற்றுதல், நேசித்தல் ஆகிய இரண்டையும் பிரித்து நோக்கமுடியாது. மாறாக, நேசத்துடன் கூடிய பின்பற்றுதல் என்பதே இறை எதிர்பார்ப்பாகும். இதன்படி அஹ்லுல் பைத்தினரை நேசிப்பதுடன் பின்பற்றினால் மாத்திரமே நபியவர்களை நேசித்ததாகவும் பின்பற்றியதாகவும் கருதமுடியும் என்பது இங்கு தெளிவாகும் உண்மையாகும்.

ஒருவரை நேசித்துக் கொண்டு அவரது விருப்பு வெறுப்புக்கு முரணாகச் செயற்படுவதை உண்மையான நேசமாகக் கருதமுடியாது. ஒருவரை உண்மையான நேசம்கொள்வது என்பது அவரை அறிந்து, நம்பி அவரது விருப்பு, வெறுப்பில் இணைந்து ஒருவராகச் செயற்படுவதையே குறிக்கும். இதனைவிடுத்து, அஹ்லுல் பைத்களை நேசிக்கின்றோம் என வாயால் மாத்திரம் கூறிக்கொண்டு அவர்களை அவர்களது அந்தஸ்த்துக்களை, சிறப்புக்களை அறியாமல், அவர்களைப் பின்பற்றி வாழாமல் இருப்பது உண்மையான நேசமாக ஆகிவிடமுடியாது.

இமாம் ஜஃபர் ஸாதிக் (அலை) இக்கருததினை பின்வருமாறு ஒரு கவிதையில் கூறுகின்றார்கள்:

تعصي الا له وانت تظهر حبه    هذا لعمري في الفعال بديع
لوكان حبك صادقا لا طعته    ان المحب لمن يحب مطيع
(سفينة البحار)

**நீ அல்லாஹ்வை நேசித்த நிலையில் அவனுக்கு மாறு செய்தால் அது எனது வாழ்நாளில் நான் காணும் அபூர்வமான விடயமாகும்! உனது நேசம் உண்மையாக இருந்தால் அவனை வழிபட்டு நடப்பாய். நிச்சயமாக ஒருவரை நேசிப்பவர் அவரை வழிபட்டு நடப்பவராகும்.** (ஸபீனதுல் பிஹார்)

இதனையே நபியவர்கள் முன்கூறப்பட்டுள்ள ஹதீதொன்றில் அல்லாஹ்வின் மீது ஆணையிட்டு அஹ்லுல் பைத்களை அறியாதவர்களுடைய எந்த அமலும் ஏற்றுக்கொள்ளப்பட மாட்டாது என சூசகமாகக் கூறியுள்ளார்கள். எனவே அஹ்லுல் பைத்களையே அறிந்து, அவர்களை நேசித்து அவர்களை வழிபட்டு நடப்பதையே இறைபோதனைகள் தெளிவுபடுத்துகின்றன.

## அஹ்லுல் பைத்களை பின்பற்றுதல்

அஹ்லுல் பைத்களை நேசிப்பதன் அவசியம் பற்றி தெளிவாகக் கூறியுள்ள நபியவர்கள், அவர்களைப் பின்பற்றி நடப்பதன் அவசியத்தையும் கூறியுள்ளார்கள்.

இறைதூதர் (ஸல்) அவர்கள் இறுதி ஹஜ்ஜை நிறைவுசெய்துவிட்டு, மதீனாவுக்குத் திரும்பிக்கொண்டிருக்கும்போது மதீனாவுக்கும் மக்காவுக்குமிடையிலுள்ள ‘கதீர்கும்’ என்னுமிடத்தில் ஸஹாபாத் தோழர்கள் அனைவரையும் ஒன்றுகூடுமாறு வேண்டினார்கள். அவ் ஆணையையேற்று ஸஹாபாக்கள் அனைவரும் ஒன்றுகூடினர். நபியவர்கள் அவர்களை நோக்கி பிரசங்கம் செய்யத் தொடங்கினார்கள். அதில் முதலில் அல்லாஹ்வை புகழ்ந்துவிட்டு பின்வருமாறு கூறினார்கள்.

عن زيد بن ارقم قال قال رسول الله (ص) الايها الناس فانما انا بشر مثلكم يوشك
ان يأتي رسول ربي فاجيب و انا تارك فيكم الثقلين اولهما كتاب الله فيه الهدي
والنور فخذوا بكتاب الله واستمسكوا به فحث علي كتاب الله ورغب فيه ثم قال اهل
بيتي اذكر كم الله في اهل بيتي اذكر كم الله في اهل بيتي اذكر كم الله في اهل بيتي
(صحيح المسلم)

**‘‘மனிதர்களே! நானும் உங்களைப்போன்று ஒரு மனிதனே; அல்லாஹ்வின் அழைப்பாணை வெகுவிரைவில் என்னிடம் வரக்கூடும். நானும் அவனுடைய அழைப்பை ஏற்க வேண்டியிருக்கும். எனக்குப் பின் நான் இரு பெறுமதியான பொக்கிஷங்களை உங்கள் மத்தியில் விட்டுச் செல்கின்றேன். அவ்விரண்டில் முதலாவது, அல்லாஹ்வின் வேதமான அல்குர்ஆன்: அதிலே நேர்வழியும், பேரொளியும் உண்டு. ஆகவே, அல்லாஹ்வின் வேதத்தை எடுத்து அதனைப் பின்பற்றிப் பிடித்துக் கொள்ளுங்கள் எனக்கூறி அல்குர்அனைப் பின்பற்றுவதில் உணர்வூட்டி அதிலே ஆர்வத்தையும் எற்படுத்தினார்கள். பின்பு, கூறினார்கள்; இரண்டாவது பெறுமதியான பொக்கிஷம் என்னுடைய குடும்பத்தினரான அஹ்லுல் பைத்தினர் ஆகும். எனது அஹ்லுல் பைத் விடயத்தில் உங்களுக்கு அல்லாஹ்வை ஞாபகமூட்டுகின்றேன்** என்று மூன்று தடவை கூறினார்கள். (ஸஹீஹுல் முஸ்லிம்; அறிவிப்பவர்: ஸயீத் பின் அர்கம், பாகம்: 02, பக்கம் 238)

இவ்வாறு அல்குர்ஆனையும் அஹ்லுல் பைத்தையும் எனக்குப் பின்னால் நீங்கள் பின்பற்றுங்கள் எனக்கூறிவிட்டு நபியவர்கள்;

**ثم أخذ بعضد علي قال ألستم تعلمون اني اولى بالمؤمنين من انفسهم فقالوا بلى يارسول الله فقال اللهم من كنت مولاه فعلي مولاه اللهم وال من والاه وعاد من عاداه وانصر من نصره واخذل من خذله وادر الحق حيث دار ( مسند احمد بن حنبل )**

நம்பிக்கையாளர்களுக்கு அவர்களின் ஆன்மாக்களைவிட நான் முதன்மையானவன் என்பதை நீங்கள் அறிவீர்கள் அல்லவா? என நபியவர்கள் வினவினார்கள். அதற்கு அவர்கள் 'ஆம்' என விடை கூறினார்கள். உடனே நபியவர்கள் அருகே நின்றிருந்த அலீயின் கரங்களைப்பிடித்து உயர்த்தியவர்களாக:

**''எவர்களுக்கெல்லாம் நான் தலைவராக இருந்தேனோ அவர்களுக்கெல்லாம் அலீ தலைவராவார்: அவரை நேசித்தவரை நீயும் நேசிப்பாயாக! அவரைப் பகைத்தவரை நீயும் பகைப்பாயாக! அவருக்குத் துணைபுரிந்தவருக்கு நீயும் துணைபுரிவாயாக! அவரைப் புறக்கணித்தவரை நீயும் புறக்கணிப்பாயாக! அவரின் பக்கம் சத்தியத்தை நிலைப்படுத்துவாயாக!** எனக் கூறினார்கள். ((முஸ்னத் அஹ்மத் பாகம்: 1, பக்கம் 119)

**ثم امر بمبايعته فاقبل القوم يبايعونه ويهنئونه بالأمر وفيهم ابو بكر وعمر فقالا هنيئا لك يا بن ابي طالب اصبحت اليوم مولى كل مؤمن ومؤمنة ( البداية والنهاية )**

இதன்பின் நபியவர்கள் அலீக்கு பைஅத் செய்யுமாறு ஏவினார்கள். அதனை ஏற்றுக்கொண்டு அனைவரும் அலீக்கு பைஅத் செய்து வாழ்த்தும் கூறினர். **அபூபக்கர், உமர் (ரலி) போன்றோர்களும் அலீக்கு பைஅத் செய்து உமக்கு சோபனம் உண்டாவதாக! நீர் இன்றிலிருந்து எல்லா முஸ்லிம்களுக்கும் தலைவராக ஆகிவிட்டீர் எனக்கூறினார்கள்.** (அல்பிதாயா வந்நிஹாயா)

மேற்படி கதீர்கும் என்னும் இடத்தில் இடம்பெற்ற நிகழ்வு இஸ்லாமிய வரலாற்றில் முக்கியத்துவம் வாய்ந்ததாகும். இந்நிகழ்வின் மூலம் தனக்குப் பின் அல்குர்ஆனையும், அஹ்லுல் பைத்தையும் பின்பற்றுங்கள் எனத் தெளிவாகக் கூறி அஹ்லுல் பைத்களில் முதல்வரான அலீயைத் தனக்குப் பின் தன்னை நபியாக ஏற்றுக்கொண்ட அனைவருக்கும் தலைவராக நியமித்து அவருடன் இணைந்து ஒத்துழைக்குமாறும் வேண்டி அவருக்கு பைஅத் செய்யுமாறும் அங்கு நிறைந்திருந்த தோழர்கள் அனைவரையும் வேண்டினார்கள். அன்றிலிருந்து அலீ அலைஹிஸ்ஸலாம் அவர்கள், இமாமாக நபியவர்களின் இடத்துக்கு உத்தியோகபூர்வமாக நியமிக்கப்பட்டார்கள்.

அஹ்லுல் பைத்தை பின்பற்றும்படி கூறும் இந்த ஹதீத் முதவாதிர் எனும் நிலையிலுள்ளதாகும். 'கதீர் கும்' என்னும் இடத்தில் நடந்த இந்த நிகழ்வை சுமார் 110 ஸஹாபாக்கள் அறிவிப்புச் செய்துள்ளனர். இந்த ஹதீதின் முக்கியத்துவத்தையும் தரத்தையும் அறிந்துகொள்ள அல்லாமா அமீனி எழுதியுள்ள கதீர் நூல் மிகப் பொருத்தமானதாகும். அந்த நூலில் இந்த ஹதீத் பற்றி ஆய்வு செய்யப்பட்டுள்ள சில முடிவுகள்:

01. இந்நிகழ்வு பற்றிய ஹதீஸை 110 ஸஹாபாக்கள் அறிவிப்புச் செய்துள்ளனர்.

02. 2ம் நூற்றாண்டில் தாபியீன்கள் 39 பேர் இந்நிகழ்வு பற்றிய ஹதீஸை அறிவிப்புச் செய்துள்ளனர்.

03. 3ம் நூற்றாண்டில் 360 ராவிகள் இதனை நகல் செய்துள்ளனர்.

**மூன்றாம் நூற்றாண்டு காலப்பகுதியில் இந்நிகழ்வைப் பற்றி பல அறிஞர்கள் ஆய்வுகளை மேற்கொண்டுள்ளனர்.**

3ம் நூற்றாண்டில் 92 அறிஞர்கள்

4ம் நூற்றாண்டில் 43 அறிஞர்கள்

5ம் நூற்றாண்டில் 24 அறிஞர்கள்

6ம் நூற்றாண்டில் 20 அறிஞர்கள்

7ம் நூற்றாண்டில் 21 அறிஞர்கள்

8ம் நூற்றாண்டில் 18 அறிஞர்கள்

9ம் நூற்றாண்டில் 16 அறிஞர்கள்

10ம் நூற்றாண்டில் 14 அறிஞர்கள்

11ம் நூற்றாண்டில் 12 அறிஞர்கள்

12ம் நூற்றாண்டில் 12 அறிஞர்கள்

14ம் நூற்றாண்டில் 20 அறிஞர்கள்

**கதீர் நிகழ்வைக் கூறும் ஹதீஸின் ஸனத் வரிசைகளை அறிவிக்கும் அறிஞர்கள்**

| | |
|---|---|
| வரலாற்றாசிரியர் தபரி: | 72 ஸனதுகளை அறிவித்துள்ளார். |
| இப்னு அக்தா அ்.்.பி: | 150 ஸனதுகளை அறிவித்துள்ளார். |
| அஹ்மத்பின் ஹஸன ஷைபானி: | 40 ஸனதுகளை அறிவித்துள்ளார். |
| இப்னு ஹஜர் அஸ்கலானி: | 25 ஸனதுகளை அறிவித்துள்ளார். |
| ஜஸரி ஷாபிஈ: | 80 ஸனதுகளை அறிவித்துள்ளார். |

இமாம் நஸாஈ: 250 ஸனதுகளை அறிவித்துள்ளார்.
அபுல் அலா ஹமதானி: 100 ஸனதுகளை அறிவித்துள்ளார்.

இவ்வாறு இந்நிகழ்வு பற்றிய பல ஆய்வு முடிவுகளை அல்லாமா அமீனியின் கதீர் நூல் தருகின்றது. விரிவஞ்சி தவிர்க்கின்றோம்.

ஆக, அல்குர்ஆனுக்கு அடுத்த நிலையிலுள்ள அஹ்லுல் பைத்களைப் பின்பற்றுவதற்கு முதவாதிர் எனும் நிலையிலுள்ள மேற்படி ஹதீஸ் மாத்திரமே போதுமானதாகும். ஆனாலும் இதுவிடயமாக இன்னும் சில ஹதீஸ்களையும் காணமுடியும்.

**عن زيد بن أرقم رضي الله عنه قال قال رسول الله صلى الله عليه وسلم اني تارك فيكم الثقلين كتاب الله وأهل بيتي وإنهما لن يتفرقا حتى يردا علي الحوض**
**(المستدرك على الصحيحين)**

ஜைத் பின் அர்கம் (ரலி) அறிவிக்கின்றார்கள்: "**நிச்சயமாக நான் இரண்டு விடயங்களை உங்களுக்கு மத்தியில் விட்டுச் செல்கின்றேன். அவற்றைப் பின்பற்றும் காலமெல்லாம் நீங்கள் வழிதவற மாட்டீர்கள். அவைகள் அல்லாஹ்வின் வேதமும், எனது குடும்பமுமாகும். நிச்சயமாக அவைகள் இரண்டும் ஹவ்லுல் கௌதரிடத்தில் என்னிடம் வரும்வரை ஒன்றைவிட்டு ஒன்று பிரியாது**" என நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். (ஹாகிம், திர்மிதி)

இந்த ஹதீதின் மூலம் நாயகமவர்களின் வபாத்திலிருந்து மறுமையில் நாயகமவர்களைச் சந்திக்கும்வரை அல்குர்ஆனையும் அஹ்லுல்பைத்தையும் இணைத்தே நோக்கி அவை இரண்டையுமே பின்பற்ற வேண்டும் என்பது நாயகமவர்களின் வேண்டுதலாகும். இதனை விடுத்து அல்குர்ஆனிற்கு அடுத்த இடத்தில் வேறொன்றை இணைக்க முற்படுவது நாயகமவர்களுக்கே மாறு செய்வதாக அமைந்துவிடும். நஊதுபில்லாஹ்!

**وعن أبي ذر قال قال رسول الله صلى الله عليه وسلم مثل أهل بيتي كمثل سفينة نوح من ركب فيها نجا ومن تخلف عنها غرق.. (مجمع الزوائد ج: 9 ص: 168)**

அபூதர் (ரலி) அறிவிக்கின்றார்கள்: **நாயகமவர்கள் கூற நான் கேட்டேன்: எனது அஹ்லுல் பைத்தினர் உங்களுக்கு மத்தியில் நூஹ் நபியின் கப்பலைப் போன்றவர்களாகும். யார் அதில் ஏறிக்கொண்டாரோ அவர் வெற்றியடைந்தார். அதில் ஏறிக்கொள்ள பின்வாங்கியவர்கள் அழிந்துவிட்டனர்.**"
(இமாம் சுயூத்தியின் இஹ்யாஉல் மையித், தபரானி, மஜ்மஉஸ் ஸவாயித்)

இந்த ஹதீஸில் அஹ்லுல்பைத்தின் தராதரத்தினை ஒரு உதாரணத்தின் மூலம் நபியவர்கள் தெளிவுபடுத்தியுள்ளார்கள். நூஹ் நபியின் கப்பல் என அஹ்லுல்பைத்துக்கு உதாரணம் கூறி, அந்தக் கப்பலில் நூஹ் நபியின் கட்டளையை ஏற்று ஏறியவர்கள் வெற்றியாளர்கள்

எனவும், கட்டளையை மதித்து ஏறாதவர்கள் இறைநிராகரிப்பாளர்களாக நீரில் மூழ்கிப்போனார்கள் எனவும் தெளிவுபடுத்துகின்றார்கள். அவ்வாறே இந்தச் சமூகத்திலும் அஹ்லுல்பைத்களை ஏற்று பின்பற்றியவர்கள் வெற்றியாளர்கள்; பின்பற்றாதவர்கள் இறைநிராகரிப்பாளர்கள் என்பது நாயகமவர்களின் முன்னறிவிப்பாகும்.

**عن بن عباس رضي الله عنهما قال قال رسول الله (ص) ثم النجوم أمان لأهل الأرض من الغرق وأهل بيتي أمان لأمتي من الاختلاف فإذا خالفتها قبيلة من العرب اختلفوا فصاروا حزب إبليس( المستدرك على الصحيحين ج: 3 ص: 162)**

இப்னு அப்பாஸ் (ரலி) அறிவிக்கின்றார்கள்; **நட்சத்திரங்கள் பூமியிலுள்ளவர்களுக்கு வழிதவறாமல் இருப்பதற்கு பாதுகாப்பளிக்கின்றது. எனது அஹ்லுல்பைத்தினர் எனது சமூகம் முரண்படாமலிருப்பதற்கான பாதுகாவலர்களாகும். அறபிகளில் எந்தக் கூட்டமாவது அவர்களுக்கு மாறு செய்தால் அவர்கள் ஷைத்தானுடைய கூட்டமாக மாறிவிடுவார்கள்**". என நபி (ஸல்) கூறினார்கள். ((முஸ்தத்ரகுஸ் ஸஹீஹைன், பாகம்: 02; பக்கம் 149)

இந்த ஹதீஸில் நாயகமவர்கள்இஸ்லாமிய சமூகம் முரண்பட்டுப் பிரியாமல் இருப்பதற்கு அஹ்லுல்பைத்தினர்களால் மாத்திரமே வழிகாட்ட முடியும் என்பதையும், அவர்களின் வழிகாட்டலுக்குக்கீழ்ப்படிவதன் காரணமாகவே ஐக்கியப்பட்ட ஒரு இஸ்லாமிய சமூகம் உருவாக முடியும் என்பதையும் தெளிவாகக் கூறியுள்ளார்கள். அஹ்லுல்பைத்களின் வழிகாட்டலிலிருந்து விலகும்போது அச்சமூகம் முரண்பாடுகளுக்குட்பட்டு ஷைத்தான்களுடைய கூட்டமாக மாறும் என்பதும் நாயகமவர்களின் எதிர்வு கூறலாகும்.

மேற்கூறப்பட்டுள்ள ஹதீஸ்கள் அனைத்தும் ஸஹீஹானவைகளாகும். அல்குர்ஆனிற்கு அடுத்ததாகப் பின்பற்றப்பட வேண்டிய அஹ்லுல்பைத்களை, அவர்களின் தகைமைகளை, சிறப்புக்களைக் கூறும் இந்த ஹதீஸ்கள் சிந்தனையுள்ளோருக்கு, நேர்வழியை நாடுவோருக்கு சிறந்த எடுத்துக் காட்டுகளாகும்.

இதன் பின்னரும் அல்குர்ஆனையும் அஹ்லுல்பைத்தினரையும் இணைத்து பின்பற்ற முடியாதவர்கள் துர்ப்பாக்கியசாலிகளாவர். அதேபோன்று இதன் பின்னர், அல்குர்ஆனிற்கு அடுத்த இடத்தை அஹ்லுல்பைத் தவிர்ந்த வேறொன்றுக்கு வழங்க முற்படுவது மடத்தனமாகும். நிச்சயமாக இந்த மடத்தனம் தன்னையும் வழிகெடுத்து, மற்றவர்களையும் வழிகெடுக்க மேற்கொள்ளப்படும் முயற்சியாகவே அமையும்.

وَمَا كَانَ لِمُؤْمِنٍ وَلَا مُؤْمِنَةٍ إِذَا قَضَى اللَّهُ وَرَسُولُهُ أَمْرًا أَن يَكُونَ لَهُمُ الْخِيَرَةُ مِنْ أَمْرِهِمْ وَمَن يَعْصِ اللَّهَ وَرَسُولَهُ فَقَدْ ضَلَّ ضَلَالًا مُّبِينًا

**அல்லாஹ்வும் அவனுடைய தூதரும் ஒரு விடயத்தைத் தீர்மானித்து விட்டால்**

**அதில் ஐயங்கொள்ள எவருக்கும் அதிகாரமில்லை. யார், அல்லாஹ்வுக்கும் அவனுடைய தூதருக்கும் மாறு செய்ய முற்படுகின்றாரோ அவர் தெளிவான வழிகேட்டில் உள்ளார்.** (அல்குர்ஆன்)

ஆகவே, நபியவர்களின் வபாத்தின் பின்னர், அல்குர்ஆனையும் அஹ்லுல்பைத்தையும் பின்பற்ற வேண்டும் என்பது அல்லாஹ்வாலும் அவனது தூதராலும் தீர்மானிக்கப்பட்டதாகும். இதனை விளங்கிக் கொள்ளாமல் அஹ்லுல்பைத்தினரின் முக்கியத்துவத்தைக் குறைத்துக் காட்டும் வகையில் பேசுபவர்கள், எழுதுபவர்கள் வழிகேட்டுக்குட்படுவார்கள் என்பது இறைகூற்றாகும்.

**வெற்றியடைந்த கூட்டம்**

நபி(ஸல்) அவர்கள் கூறியதாக பின்வரும் ஹதீஸ் அறிவிக்கப்பட்டுள்ளது.

**ستفترق أمتى على ثلاث وسبعين فرقة الناجية منهم واحدة والباقون هلكى!**

**''எனது சமூகம் பிற்காலத்தில் 73 கூட்டங்களாகப் பிரிந்து விடும். அதில் ஒரு கூட்டமே வெற்றிபெற்ற கூட்டமாகும். ஏனையவர்கள் அழிந்து போகக் கூடியவர்களாகும்''.**

இந்தக் கருத்துடைய பல ஹதீத்களை ஹதீத் நூல்களில் காண முடிகின்றது. இந்த ஹதீதில் வரும் ''வெற்றி பெற்ற கூட்டம்'' யாரென நோக்கும்போது இன்று காணப்படும் ஒவ்வொரு இஸ்லாமிய இயக்கஙளும் தங்களையே வெற்றி பெற்ற கூட்டம் என அழைத்துக் கொள்கின்றனர். ஆனாலும் நபி (ஸல்) அவர்கள் மிகத் தெளிவாக வெற்றிபெற்ற கூட்டத்தை அடையாளப்படுத்தியுள்ளார்கள்.

**عن أبي سعيد الخدري قال سمعت النبي صلى الله عليه وسلم يقول إنما مثل أهل بيتي كمثل سفينة نوح من ركبها نجا ومن تخلف عنها غرق ( مجمع الزوائد ج: 9 ص: 168)**

ஸஈத் அல் குத்ரி (ரழி) அறிவிக்கின்றார்கள் **''எனது அஹ்லுல் பைத்துக்கு உதாரணம் நூஹ் நபியின் கப்பலைப் போன்றதாகும். யார் அதில் ஏறிக் கொண்டாரோ அவர் வெற்றியடைந்து விட்டார். யார் அதில் ஏறாமல் பின் தங்கினாரோ அவர் (நீரில்) மூழ்கிவிட்டார்''** என நபியவர்கள் கூறினார்கள். (ஸஹீஹ் முஸ்லிம்: இமாம் சுயூத்தி: இஹ்யாஉல் மையித்)

இந்த ஹதீதில் நபியவர்கள் **'நஜா'** என்று வெற்றி எனும் கருத்தைத் தரக்கூடிய சொல்லை பயன்படுத்தியுள்ளார்கள். முன்னுள்ள ஹதீதிலும் வெற்றியைக் குறிப்பதற்கு இந் **'நஜா'** எனும் சொல்லிருந்து பிறந்த **'அந்நாஜியா'** எனும் சொல்லையே பயன்படுத்தியுள்ளார்கள்.

ஆக, இதிலிருந்து நிச்சயமாக அஹ்லுல் பைத்தை பின்பற்றி வாழும் கூட்டமே அவ்வெற்றி பெற்ற கூட்டமென ஐயமின்றி தெளிவாகின்றது.

அஹ்லுல் பைத்தினரும் அவர்களைப் பின்பற்றி வாழ்வோரும்தான் வெற்றியாளர்கள் என்பதை பின்வரும் ஹதீதிலும் நபியர்கள் தெளிவுபடுத்தியுள்ளார்கள்.

**عن جابربن عبدالله قال : كنا عند النبى (ص) فا قبل علي فقال النبي (ص) والذى نفسي بيده ان هذا وشيعته هم الفائزون يوم القيامة (ابن عساكر/ تفسير الدر المنثور)**

ஜாபிர் (ரழி) அறிவிக்கின்றார்கள்: ''**நாங்கள் நபியவர்களிடம் இருந்து கொண்டிருக்கும்போது அலி வந்தார். அப்போது நபியவர்கள் 'எனது ஆன்மா யாரிடம் இருக்கின்றதோ அவனின்மீது ஆணையாக நிச்சயமாக இவரும் (அலியும்) இவரைப் பின்பற்றி வாழ்வோரும்தான் மறுமையில் வெற்றியாளர்கள**' எனக் கூறினார்கள். (இப்னு அஸாகிர் / தப்ஸீர் துர்ருல் மன்தூர்)

இந்த ஹதீதில் நேரடியாகவே நபியவர்கள் இமாம் அலியையும் அவரைப் பின்பற்றுவோர்களையும் மறுமையின் வெற்றியாளர்கள் எனக் கூறியதன் மூலம் அஹ்லுல் பைத்களை பின்பற்றி வாழ்வோர்தான் வெற்றியடைந்த கூட்டத்தினர் என்பதை மேலும் தெளிவுபடுத்துகின்றார்கள். இமாம் சுயூத்தி தனது துர்ருல் மன்தூர் எனும் தப்ஸீரில் **سورة البينة**வில் வரும் **أُولَٰئِكَ هُمْ خَيْرُ الْبَرِيَّةِ** எனும் வசனத்திற்கு தப்ஸீராக இந்த ஹதீதை குறிப்பிட்டுள்ளார்கள்.

இதன்படி அல்குர்ஆன் வசனத்தில் வரும் **خيرالبرية** எனும் சிறந்த படைப்பினர்களாக அலியும் அவரைப் பின்பற்றி நடப்போருமே கருதப்படுகின்றார்கள்.

## அஹ்லுல்பைத்தினர் கொண்டுள்ள தகமைகள் சில:

1. **மஃசூம்கள்**

அஹ்லுல்பைத்தினர் பாவம் செய்யும் தன்மையற்றவர்களாகும். அவர்களை சகல பாவங்களிலிருந்தும் தூய்மைப்படுத்தியுள்ளதாக அல்லாஹ்தஆலா (33:33) குறிப்பிடுகின்றான். பாவம் செய்பவர்களை அல்லாஹ்வுக்கு மாறு செய்பவர்களை வழிகாட்டிகளாக எடுத்துக் கொள்ள முடியாது.

**قال رسول الله (ص) لابن مسعود : لا طاعة لمن عصى الله ...**
**(سنن البيهقي الكبرى ج: 3 ص: 127)**

இப்னு மஸ்ஊத் (ரலி) அறிவிக்கின்றார்கள்: அல்லாஹ்வுக்கு மாறு செய்பவனை பின்பற்ற முடியாது. (ஸஹீஹுல் புகாரி)

فلاتطع المكذبين ( سورة القلم: 8)

பொய்யர்களை நீர் பின்பற்ற வேண்டாம். (சூரா தஹ்ர்: 8)

فاصبر لحكم ربك ولاتطع منهم آثما اوكفورا (سورة الدهر 24)

உமது இறைவனின் தீர்ப்பை எதிர்பார்த்திருங்கள். அவர்களில் பாவகாரியங்கள் புரிபவர்களையும், நிராகரிப்பவர்களையும் பின்பற்ற வேண்டாம். (சூரா: 24) இவைகளைவிட எத்தனையோ ஆதாரங்கள் பாவம் செய்பவர்களைப் பின்பற்றக் கூடாது எனக் கூறுகின்றது. இதனால்தான் நபிமார்களை அல்லாஹ் மஃசூம்களாக ஆக்கினான். அதே போன்று அஹ்லுல் பைத்தினரையும் மஃசூம்களாக ஆக்கியுள்ளான்.

இன்னும் ஒரு வகையில் நோக்கும்போது அதாவது அல்குர்ஆனுக்குச் சமமாக அஹ்லுல்பைத்தினர் காணப்படுகின்றமையால் இரண்டும் சமமான குணங்களை, அம்சங்களைக் கொண்டதாக காணப்படவேண்டும். எனவே, அல்குர்ஆன் புனித வேதமாகும். அதில் பொய், முரண்பாடு கிடையாது. இதுபோன்ற அதே தரத்திலுள்ள அஹ்லுல்பைத்துகளும் பரிசுத்தவான்களாகும். அவர்களிடத்தில் பாவ காரியங்களோ, முரண்பாடுகளோ இல்லை.

எனவே, இந்த இறை நியதிக்கேற்ப பின்பற்றப்படுபவர்கள் மஃசூம்களாக இருந்தால் பின்பற்றுபவர் பிற்காலத்தில் கைசேதப்பட வேண்டிய தேவையில்லை. இதனை விடுத்து தனது அறிவுக்கு சரியெனப்பட்டவைகளை, தான் அறிஞர்கள் என்று கருதுபவைகளை பின்பற்றுபவர்கள் இறைநியதிக்கு மாற்றம் செய்பவர்கள். அவர்கள் தனது வாழ்நாளிலேயே கைசேதப்படுவதை அவதானிக்க முடிகின்றது. உதாரணமாக குறிப்பிட்ட அறிஞருடைய சிந்தனையை பல வருடகாலமாகப் பின்பற்றிய ஒருவர் பின்னர் அது தவறெனக் கருதி தனது பாதையை மாற்றிக் கொள்பவர்களை இன்று அதிகம் காணக்கூடியதாகவுள்ளது. இவர்கள் பலவருடங்களாக அவரை பின்பற்றியதை நினைத்து கைசேதப்படுவதைக் காணலாம். இந்நிலை அல்குர்ஆனையும் அஹ்லுல்பைத்திரையும் பின்பற்றாத எல்லோருக்கும் வரும் என்பதில் ஐயமில்லை.

## 2. அஹ்லுல்பைத்தினர் அதிக அறிவுள்ளவர்கள்:-

அல்குர்ஆனையும், நாயகமவர்களது வழிமுறையையும் அதிகம் அறிந்தவர்கள் நபியவர்களின் குடும்பத்தவர்களான அஹ்லுல்பைத்தினர் களேயாகும். நபியவர்களிடமிருந்து நேரடியாக நுபுவத்தின் நூரானிய்யத்தை அனுபவதித்த அவர்கள் சிறந்த அறிவாளிகளாகும்.

**"அஹ்லுல்பைத்கள் உங்களில் அதிகம் அறிவுள்ளவர்கள். அவர்களுக்கு கற்றுக்கொடுக்க நீங்கள் முனையாதீர்கள். அழிந்து விடுவீர்கள்".** (திர்மிதி)

ஒருவர் தான் பின்பற்றுபவர் அறிவு, ஆற்றல், ஒழுக்கம், பேணுதல், வீரம் போன்ற அனைத்திலும் சிறந்தவராக அல்லது முதலாமவராக இருக்க வேண்டும் என ஆசைப்படுவார். அவ்வாறானவர் இவைகள் அனைத்திலும் முதலாமவர்களாக அஹ்லுல்பைத்களை மாத்திரமே காண முடியும். அஹ்லுல்பைத்தினரில் முதலாவரான இமாம் அலீயின் அறிவுத் தரம் இங்கு நோக்கப்பட வேண்டியதொன்றாகும்.

قال رسول الله(ص): اعلم من بعدي علي ابي طالب

**எனக்குப் பின் எனது உம்மத்தில் சிறந்த அறிவாளி அலீ பின் அபீதாலிபாகும்** (திர்மிதி)

**قال ابن عباس : علم النبي من علم الله وعلم علي من علم النبي وعلمي من علي**
**وما علمي وعلم الصحابة في علم علي الا كقطرة في سبعة ابحر ( ينابيع المودة )**

இப்னு அப்பாஸ் (ரலி) அறிவிக்கின்றார்கள்: நாயகவர்களின் அறிவு அல்லாஹ்வின் அறிவிலிருந்து உருவானதாகும். அலீயின் அறிவு நாயகமவர்களின் அறிவிலிருந்து உருவானதாகும். எனது அறிவு அலீயின் அறிவிலிருந்து உருவானதாகும். எனது அறிவும் ஸஹாபாக்கள் கொண்டுள்ள அறிவும் அலீயின் ஏழு கடல் போன்ற அறிவிலிருந்து பெறப்பட்ட ஒரு துளியைப் போன்றதாகும். (யனாபிஉல் மவத்தாஹ்)

அஹ்லுல்பைத்களின் அறிவின் தரத்தை அளவிடவோ நிர்ணயிக்கவோ முடியாது. அல்குர்ஆனில் எந்த வசனம் எங்கு, ஏன் இறங்கியது என நான் நன்கு அறிவேன்" என இமாம் அலீ கூறியுள்ளதுடன் 'தான் மரணிக்கும் முன் என்னிடத்தில் தேவையானவைகளைக் கேட்டறிந்து கொள்ளுங்கள்' எனக் கூறியுள்ளார்கள். இவ்வார்த்தைகள் சாதாரணமான ஒருவரின் வார்த்தைகளிலிருந்து வர முடியாது. இமாம் அலீயின் நீதித் தீர்ப்பு நாயகவர்களின் வபாத்திற்குப் பின்னர் சகல ஸஹாபாக்களாலும் வேண்டப்பட்டதுடன் மதிக்கப்பட்டுமுள்ளது. இமாம் அலீயின் அறிவுரைகளை, அவர்களது போதனைகளை அறிந்து கொள்ள முயல்வோர் **நஹ்ஜுல் பலாகா**வை பார்க்கலாம்.

### 3. இமாமுஸ் ஸமான்

இஸ்லாமிய நோக்கில் ஒவ்வொரு காலத்திற்கும் ஒரு இமாம் தோன்றுவர். அவரை அறிந்து அவருக்கு பைஅத் செய்து அவரைப் பின்பற்றி வாழ்வது கடமையாகும்.

قال رسول الله صلى الله عليه وسلم :ثم من مات وليس له إمام مات ميتة جاهلية
(صحيح ابن حبان ج: 10 ص: 434)

**யார் தனது கால இமாமை அறியாமல் மரணிக்கின்றாரோ அவர் அறியாமையில் (ஜாஹிலிய்யத்தில்) மரணிக்கின்றார் என நாயகமவர்கள் கூறியுள்ளார்கள்.** (ஸஹீஹ் முஸ்லிம்)

தனது கால இமாமை அறியாமல் எந்த மு.்.மினும் வாழ முடியாது. அஹ்லுல் பைத் வழிகாட்டலில் மாத்திரமே தனது கால இமாமை ஒருவர் அறிந்து கொள்ளத்தக்க வழிகாட்டல் காணப்படுகின்றது. அஹ்லுல் பைத்களை பின்பற்றுவோர் தனது கால இமாமை தெளிவாக அறிந்து அவருக்கு பைஅத் செய்து வாழ்கின்றனர்.

## அல்குர்ஆனுக்கு அடுத்தது எது?

நாயகமவர்களின் வபாத்தின் பின்னர் அல்குர்ஆனுக்கு அடுத்ததாக நாயகமவர்களினால் கூறப்பட்டது அஹ்லுல் பைத்தா? அல்லது சுன்னத்தி என்பதா?

அல்குர்ஆனுக்கு அடுத்தது அஹ்லுல் பைத்துதான் எனக் கூறும் ஹதீத் ஸனத் ரீதியாக முதவாத்திர் எனும் நிலையை பெற்றுள்ளது. ஆதலால், அதன் ஸனத் பற்றி நோக்க வேண்டிய தேவையில்லை. ஆனால், சுன்னதி எனக்கூறும் ஹதீதின் நிலைப்பாடு என்ன என்பது நோக்கப்பட வேண்டிய விடயமாகும்.

அதிகமான உலமாக்கள் சுன்னத்தி என வரக்கூடிய ஹதீத் எங்குள்ளது? என வினவும்போது புஹாரி, முஸ்லிம் .... என எல்லா நூல்களிலும் உள்ளது என்று கூறுவது வழமையாகும். உண்மையில் அந்த ஹதீத்களை அந்த உலமாக்கள் தங்கள் கண்களால் கண்டேயிருக்க மாட்டார்கள்.

உண்மையில் இந்த ஹதீத் ஸிஹாஹு"ஸ்ஸித்தா எனக் கூறப்படும் ஆறு ஹதீத் கிரந்தங்களில் எங்கும் காணப்படவில்லை. ஆனால், அஹ்லுல் பைத் எனும் ஹதீத் ஸஹீஹ் முஸ்லிம், திர்மிதி போன்ற ஹதீத் கிரந்தங்களில் இடம்பெற்றுள்ளன.

**சுன்னத்தி** எனும் இந்த ஹதீத் ஹாகிம் நைசாபூரி தனது முஸ்தத்ரக் ஸஹீஹைனில் பதிவாக்கியுள்ளார்.

قال رسول الله (ص) ياايها الناس اني تركت فيكم ان اعصمتم به فلن تضلوا ابدا
كتاب الله وسنة نبيه

**மனிதர்களே! உங்கள் மத்தியில் நான் விட்டுச் செல்பவற்றை பின்பற்றும் காலமெல்லாம் வழிகாட்ட மாட்டீர்கள். அது அல்லாஹ்வின் வேதமும் அவனது தூதரின் வழிமுறையுமாகும்.** (முஸ்தத்ரக், பாகம்: 01, பக்கம்: 93)

இந்த ஹதீத் ஸனதை நோக்கும்போது அதில் இஸ்மாயில் பின் அபீ உவைஸ், அபூ உவைஸ் ஆகிய தந்தையும் மகனும் இடம்பெற்றுள்ளனர். இவர்கள் இருவரது நிலையைப்பற்றி ஹதீத் திறனாய்வுக்கலை அறிஞர்கள் அதிருப்தி வெளியிட்டுள்ளனர்.

1. யஹ்யா பின் முஈன் எனும் ஹதீத் திறனாய்வுக்கலை அறிஞர் பின்வருமாறு கூறுகின்றார்: அபூ உவைஸ், அவரது மகன் இஸ்மாயில் ஆகிய இருவரும் ராவிகளில் பலயீனமானவர்கள். அத்தோடு ஹதீத்களை இருட்டடிப்புச் செய்பவர்களாகவும் உள்ளனர். இதனால் அவர்கள் நம்பிக்கைக்குரியவர்கள் அல்ல. (தஹ்தீபுல் கமால், பாகம்: 03, பக்கம்: 137)

2. இப்னு ஹஜர் தனது பத்ஹுல் பாரியின் முன்னுரையில்: இஸ்மாயில் அறிவிக்கும் ஹதீத்களை நாம் ஆதாரமாக ஏற்க முடியாது. காரணம் இஸ்மாயில் இமாம் நஸாஈன் பார்வையில் தீயவராகக் காணப்படுகின்றார். (இப்னு ஹஜர் அல் அஸ்கலானீ, பத்ஹுல் பாரி, பக்கம்: 391)

3. அபூ காதம் ராஸி அவர்கள் தனது அல் ஜரஹ் வத்த'.தீல் எனும் நூலில் 'அபூ உவைஸ் அறிவிக்கும் ஹதீத்கள் எழுதப்படும். ஆனால், அதை ஆதாரமாக எடுத்துக் கொள்ள முடியாது. ஏனெனில் அவரது ஹதீத் பலமற்றதாகும்'. (அல் ஜரஹ் வத்த'.தீல் பாகம்: 05, பக்கம் 92)

   அபூ காதம் இந்நூலில் இப்னு முஈன் கூறியதாக பின்வருமாறு குறிப்பிடுகின்றார். அபூ உவைஸ் நம்பத்தக்கவரல்ல எந்த ஹதீதின் ஸனதிலும் அபூ உவைஸும் இஸ்மாயில் பின் உவைஸும் இருப்பார்களானால் அது ஸஹீகாக இருக்க மாட்டாது.

4. இந்த ஹதீதை பதிவுசெய்த ஹாகிம் நைசாபூரி இந்த ஹதீத் ழஈப் - பலவீனமானது - என ஏற்றுக்கொண்டுள்ளார்.

இதுபோன்று ஹாகிம் நைசாபூரி இன்னுமொரு ஹதீதையும் அறிவித்துள்ளார்

اني قد تركت فيكم شيئين ما ان تمسكتم بهما لن تضلوا بعدهما كتاب الله وسنتي
ولن يفترقا حتي يردا علي الحوض ( المستدرك ج 1 ص 93)

**''நிச்சயமாக உங்கள் மத்தியில் இரு விடயங்களை விட்டுச் செல்கின்றேன். அவற்றை நீங்கள் பின்பற்றும் காலமெல்லாம் வழிதவற மாட்டீர்கள். அல்லாஹ்வின் வேதமும் எனது சுன்னதுமாகும். அவையிரண்டும் ஹவ்லுல் கௌதரிடத்தில் வரும்வரை ஒன்றையொன்று பிரியாது''.** (முஸ்தத்ரக், பாகம்: 01, பக்கம்: 93)

இந்த ஹதீதின் ஸனதில் வரக்கூடிய ஸாலிஹ் பின் மூஸா என்பவர் ஹதீத் திறனாய்வுக்கலை அறிஞர்களிடத்தில் நம்பத் தகுதி அற்றவராகவே காணப்படுகின்றார்.

1 அபூ காதம்: ஸாலிஹ் பின் மூஸா பற்றிக் கூறும் போது ஸாலிஹ் பின் மூஸாவின் ஹதீத் பலவீனமாதாகும். அவர் அறிவிக்கும் ஹதீத்கள் நிராகரிக்கப்பட வேண்டியவை எனக் கூறி இமாம் நஸாஈ 'ஸாலிஹ் பின் மூஸா அறிவிக்கும் ஹதீத்களை தூக்கிவீச வேண்டும் எனக் கூறியதாகவும் அறிவிக்கின்றார். (தஹ்தீபுல் கமால், பாகம்: 13, பக்கம்: 96)

2. இப்னு ஹஜர்: ஸாலிஹ் பின் மூஸா பற்றிக் குறிப்பிடும்போது, ''ஸாலிஹ் பின் மூஸா அறிவிக்கும் ஹதீத்கள் தூக்கி வீசப்படும்''. (தஹ்ரீப், பாகம்: 04, பக்கம்: 355)

3. தகபி தனது நூலில்; ஸாலிஹ் பின் மூஸா பற்றி ஸாலிஹ் பின் மூஸாவின் ஹதீத் பலவீனமாதாகும். (தஹபி ஹாஷி.'.ப்)

4. தகபி தனது மீஸானுல் இ.'.திதால் எனும் நூலில்; ஸாலிஹ் பின் மூஸாவின் இந்த ஹதீதையே குறிப்பிட்டு அது அவருடைய நிராகரிக்கப்பட்ட ஹதீத்களில் ஒன்றாகவும் குறிப்பிட்டுள்ளார். (மீஸானுல் இ.'.திதால், பாகம்: 02, பக்கம்: 302)

எனவே சுன்னதி எனக் குறிப்பிடப்படும் ஹதீத் ழயீபானது, பலயீனமானது என்பது மேற்படி ஹதீத் திறனாய்வுக்கலை அறிஞர்களின் கருத்துக்களிலிருந்து தெளிவாகும் உண்மையாகும். இந்த ஹதீதை இமாம் மாலிக்கும் எவ்வித ஸனதும் இன்றி அறிவித்துள்ளார். (முவத்தா, பக்கம்: 889) ஸனத் இல்லாத எதையும் ஆய்வுசெய்யத் தேவையில்லை. அதனையும் பலவீனமானது எனும் முடிவுக்கே வரவேண்டியுள்ளது.

மேற்படி ஹதீத்கள் அஹ்லுல் பைத்களின் முக்கியத்துவத்தை குறைத்துக் காட்டுவதற்காக அல்லது அவர்களின் முக்கியத்துவத்தை வரலாற்றில் இல்லாதொழிப்பதற்காக மேற்கொள்ளப்பட்ட முயற்சிகளில் ஒன்றாகும். இஸ்லாமிய வரலாற்றில் அஹ்லுல் பைத்கள் உமையா, அப்பாஸிய ஆட்சியாளர்களினால் ஒடுக்கப்பட்டதுடன் இம்சிக்கப்பட்டனர். அவர்களின் தூண்டுதலினால்தான் இவ்வாறான ஹதீத்கள் தோற்றம் பெற்றுள்ளன.

நிச்சயமாக, உண்மை இறுதிநாள்வரை நிலைத்திருக்கும்: அப்போது பொய் அழிந்து விடும். ஆகவே, அஹ்லுல் பைத்தை பின்பற்றும்படி கூறப்பட்டுள்ள ஹதீத் எவ்வித ஐயமுமின்றி ஏற்றுக்கொள்ளப்படும் தரத்தை கொண்டதாகும். இந்த ஹதீதின் முக்கியத்துவத்தை எந்த சக்திகளாலும் மறைக்கவோ மறுக்கவோ முடியாது. ஏனெனில் இது இறைவனின் தீர்மானமாகும்.

சுன்னதீ எனும் ஹதீஸை ஸஹீஹ் எனக் கொண்டாலும் நபி வாழ்வை அஹ்லுல் பைத்கள் மூலம் அறிவதே மிக மேலானதாகும். இதனையே நபியவர்களும் மேற்படி ஹதீஸ்களில் வழியுறுத்தியுள்ளார்கள். **இங்கு நபி வழியான சுன்னத்தை நிராகரித்து அஹ்லுல் பைத்தை பின்பற்ற வேண்டும் என்பதல்ல. மாறாக நபியவர்களின் வழியை - தூய அஹ்லுல் பைத்களின் வழிகாட்டலில் தூய வடிவில் - பெற முயல்வதே இங்கு அவதானிக்கப்பட வேண்டிய உண்மையாகும்.** அஹ்லுல் பைத்களே நபியவர்களின் செயற்பாடுகளை அதிகம் அறிந்தவர்கள். இதனால்தான் நபியவர்களினால் அவர்களின் வாழ்வை காட்டுவதற்கு அஹ்லுல் பைத்தினர் நியமிக்கப்பட்டார்கள்.

## அஹ்லுல் பைத்துகளைப் பின்பற்றுபவர்கள் எங்கே?

இன்று அல்குர்ஆனையும் அஹ்லுல் பைத்களையும் பின்பற்றுவோர் உலகின் பல பாகங்களிலும் காணப்படுகின்றனர். பஹ்ரைனில் 95%, ஈரான் 96%, ஈராக் 85%, அஸர்பைஜான் 100% தவிர ஆப்கானிஸ்தான், துருக்கி, லெபனான், சஊதி அரேபியா, பாக்கிஸ்தான், இந்தியா என இவ்வாறு உலகின் நாலா பாகங்களிலும் வாழ்ந்து வருகின்றனர்.

அல் குர்அனையும் அஹ்லுல் பைத்களில் வந்த 12 இமாம்களையும் பின்பற்றி வாழும் இவர்கள் நபியவர்களின் வழிமுறையை தூய்மையாகப் பின்பற்றுகின்றார்கள்.

يا ايها الذين آمنوا اطيعوا الله واطيعوا الرسول واولي الامر منكم
(النساء 59)

**ஈமான் கொண்டோர்களே! அல்லாஹ்வையும் அவனது தூதரையும் உங்களில் அதிகாரம் கொடுக்கப்பட்டவர்களையும் பின்பற்றுங்கள்.** (நிஸா:59) இவ்வசனத்தில் குறிப்பிடப்படும் ‘உங்களில் அதிகாரம் கொடுக்கப்பட்டவர்கள் என்பது அஹ்லுல் பைத் இமாம்களையே குறித்துக் காட்டுகின்றது.

قال رسول الله (ص) لايزال الدين قائما حتي تقوم الساعة او يكون عليهم اثنا
عشر خليفة كلهم من قريش (صحيح المسلم ج 6 ص 3)

நபியவர்கள் கூறினார்கள்: **12 கலீபாக்கள் வரும்வரை மார்க்கம் - இறுதிநாள் வரை இருந்துகொண்டிருக்கும். அவர்கள் அனைவரும் குறைஷியர்களாகும.** (ஸஹீஹ் முஸ்லிம், பாகம்: 06 பக்கம்: 03)

மேற்படி நாயகமவர்களின் கூற்று மேலுள்ள அல்குர்ஆன் வசனத்தை விளங்கப்படுத்துவதாகவுள்ளது. அதிகாரம் கொடுக்கப்பட்டவர்களை பின்பற்றுங்கள் எனும் குர்ஆனின் கருத்தானது நபியவர்களால் பின்பற்றும்படி அதிகாரம் கொடுக்கப்பட்ட 12 இமாம்களையே குறிக்கின்றது என்பதில் ஐயமில்லை. இந்த ஹதீதில் 12 கலீபாக்கள் என்று வந்தாலும் அதனைத் தொடர்ந்து ஸஹீஹ் முஸ்லிமில் வரக் கூடிய ஹதீத்களில் 12 அமீர்கள் (அதிகாரம் கொடுக்கப்பட்டவர்கள்) என்றும் அறிவிப்புக்கள் வந்துள்ளன.

ஆகவே, அஹ்லுல் பைத்கள் இமாம் அலீயை முதல் இமாமாகவும் 12வது இமாமாக இமாம் மஹ்தியையும் ஏற்று பின்பற்றுகின்றனர்.

எனவே, அஹ்லுல் பைத்களை பின்பற்றும் இவர்களுக்கு இமாமியாக்கள், இத்னா அஷரீயாக்கள், ஷீஆக்கள் என பல பெயர்கள் வழங்கப்படுகின்றன.

12 இமாம்களையும் பின்பற்றுவதனால் இமாமியாக்கள், இத்னா அஷரீயாக்கள் என இவர்கள் அழைக்கப்படுகின்றனர். ஷீஆ என்பது அஹ்லுல் பைத்களை குறிப்பாக இமாம் அலீயுடன் இருந்தவர்களை குறிப்பதற்காக நாயகமவர்களால் பயன்படுத்தப்பட்ட ஒரு சொல்லே ஆகும். ஒரு சந்தர்ப்பத்தில் நாயகமவர்கள் அலீயைப் பார்த்து,

**والذي نفسي بيده ان هذا وشيعته لهم الفائزون يوم القيامة ( الدر المنثور )**

**என் ஆத்மா எவனிடமிருக்கின்றதோ அவன் மீது ஆணையாக இவரும் (அலி) இவரது ஷீஆக்களும் மறுமையில் வெற்றியடைவார்கள** எனக் குறிப்பிட்டார்கள். (ஆதாரம், இமாம் சுயூதி: துர்ருல் மன்தூர்)

ஆக, ஷீஆ என்பது அப்துல்லா இப்னு ஸபா எனும் கற்பனை மனிதனால் உருவாக்கப்பட்டதல்ல. மாறாக நாயகமவர்களால் அலீக்கும் அலீயைப் பின்பற்றி நடக்கும் நேசர்களுக்கும் நாயகமவர்களது காலத்திலேயே சூட்டப்பட்ட பெயராகும்.

யா அல்லாஹ்! எங்களை புனித அஹ்லுல் பைத்களை நேசித்து பின்பற்றி வெற்றிபெற்ற கூட்டமாக ஆக்கிவைப்பாயாக!